2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம்: 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 ★ மதுரை 14—11—75 வெள்ளி ★ மலர் 238

### நெய்வேலி லிக்னைட் ஊழியர்கள்
## 42 பேர் வீட்டுக்கு!

நெய்வேலி, நவ. 12—
நாட்டில் அவசர நிலைப் பிரகடனம் செய்யப்பட்ட பின்பு, அரசாங்க அலுவலக ஊழியர்களும், பொதுத்துறை நிறுவன ஊழியர்களுமாக பல ஆயிரம் பேர் "கட்டாய ஓய்வு" என்ற பெயரில் வேலையிலிருந்து நீக்கப்பட்டு, வீட்டுக்கு அனுப்பப்பட்டு வருகிறார்கள் அல்லவா?

இப்போது நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேசனில் மட்டும் 42 பேர் கட்டாய ஓய்வு அளிக்கப்பட்டு வீட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளனர். இவர்களில் 14 பேர் அதிகாரிகள்; ஏனையோர் தொழிலாளர்கள். மேலும் பலர் வீட்டுக்கு அனுப்பப்படலாம் என்றும் கூறப்படுகிறது.

### டச்சு ஆதிக்கத்திலிருந்து
## மேலும் ஒரு நாடு சுதந்திரமடைகிறது

புதுடெல்லி, நவ. 12—
தென் ஆப்பிரிக்காவின் வடக்குக் கடற்கரையில் உள்ள 'சூரிணம்' என்ற நாடு டச்சு ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு சுதந்திரம் அடைகிறது. வருகிற 25-ந் தேதி முதல் சூரிணம் சுதந்திர நாடாகும். இந்நாடு முன்பு 'டச்சு கயானா' என்று அழைக்கப்பட்டுவந்தது.

இந்நாட்டின் சுதந்திர விழாக் கொண்டாட்டத்தில் இந்தியாவின் சார்பில், வெளியுறவு துணை அமைச்சர் பிபின்பால் தாஸ் கலந்து கொள்வார்.

## காலி வீடுகளை எடுத்தார்கள்
# கைவிடப்பட்ட பெண்களின் தீரம்
### பிரிட்டிஷ் அரசுக்கு மண்டையடி

லண்டன், நவ. 12—
கணவன்—மனைவி சண்டையால் பாதிக்கப்பட்டு—கணவன்மார்களால் கைவிடப்பட்டு—வீட்டை விட்டு வெளியேறிய மனைவிமார்கள் லண்டன் மாநகரில் ஏராளமாக உள்ளனர். அவர்கள் திங்கவும் உணவு இன்றி, தங்கவும் நிழல் இன்றி தத்தளித்தார்கள்.

கணவன்மார்கள் அடித்து விரட்டப்பட்ட அந்த பெண்களெல்லாம் ஒன்று சேர்ந்து, குடி இருக்க வீடு தேடினார்கள். கிடைக்கவில்லை.

#### காலி வீடுகளில் புகுவோம்

அப்புறம் கூடிப் பேசினார்கள். லண்டனில் எங்கெங்க ஓட்டல்கள், மாடிகள், வீடுகள் குடியிருப்பாரின்றி பூட்டப்பட்டு கிடக்கிறதோ, அங்கே புகுந்து கொள்ளுவது என்று தீர்மானித்தார்கள்.

அஞ்சிக் கிடப்பதால் பஞ்சம் தெளியாது என்று உணர்ந்த அவர்கள் என்ன எதிர்ப்பு வந்தாலும், அந்த எதிர்ப்புகளை கோர்ட்டிலும் பார்த்துக் கொள்ளுவது ரோட்டிலும் பார்த்துக் கொள்ளுவது என்று நெஞ்சம் துணிந்தார்கள்.

லண்டன் நகரையடுத்து ரிச்மண்டு என்ற இடத்தில் ஜார்ஜிய மாளிகை போன்ற அழகான ஓட்டல், பூட்டப்பட்டுக்கிடப்பதைக் கண்டார்கள். கடந்த வாரம் 17 பெண்களும் அவர்களது குழந்தைகளுமாக, வாடகைக் கார்களில் ஏறிச்சென்று, அந்தஓட்டலின் பின்புறத்தில் இறங்கி-கதவுகளை உடைத்துநொறுக்கி உள்ளே புகுந்து ஓட்டலை குடியிருப்பு வீடு போல் அமைத்து-தாங்கள் கொண்டுவந்திருந்த தட்டு முட்டுச்சாமான்களையெல்லாம் அங்கு நிரப்பி-சமையல் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். பழைய பூட்டுகளை உடைத்தெறிந்துவிட்டு புதுப்பூட்டு சாவி போட்டுக் கொண்டார்கள்.

சிறுவர்கள் ஓட்டல் புல்வெளியில் விளையாடலானார்கள். இந்த ஓட்டல் ஆக்ரமிப்பு வேலையானது, ஓர் யுத்தக்காட்சி போல இருந்தது.

#### போலீசையும் எதிர்த்தனர்

ஓட்டல் சொந்தக்காரர் போலீசுக்கு போன் செய்தார். போலீஸ் வேன் பறந்தோடி வந்தது. ஓட்டலை விட்டுவெளியேற வேண்டுமென்று போலீஸ் அதிகாரிகள் உறுமினார்கள். பெண்கள் பயப்படவில்லை. "இது எங்கள் வீடு. நாங்கள் இங்கு வசிக்கிறோம். போலீசார் வந்து தலையிட அவசியமில்லை" என்று பெண்கள் சொன்னார்கள்.

ஓட்டலை விட்டு வெளியேற வேண்டுமென்று போலீஸ்கெடுபிடிசெய்யவே அத்தனை பெண்களும் ஒன்று திரண்டு, அத்துமீறிபோலீசார்உள்ளேபுகுந்தால்,போலீஸ்காரர்களைத் தாக்குவது என்று முடிவு செய்து, தடுப்புகளை அமைத்து போராட ஆயத்தமானார்கள்.

ஓட்டல் சொந்தக்காரர்கள் திகைத்தார்கள். வீட்டில் உள்ளோரை வெளியேற்ற வேண்டுமானால், கோர்ட்டு மூலம் தான் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்பது சட்டமாதலால், பலாத்காரமாக வெளியேற்றும் முயற்சியைக் கைவிட்டனர். போலீசார் வந்தவழியே சென்று விட்டனர்.

#### அரசுக்கு மண்டையடி

இன்று தொழிற்கட்சி சர்க்காருக்கு இரண்டு மண்டையடி ஏற்பட்டு இருக்கிறது.

ஒன்று, கணவன்மார்களை விட்டுப் பிரிந்த பெண்களின் வாழ்க்கைப் பிரச்னைகளுக்கு தீர்வுகாண வேண்டும். இது ஒரு மண்டையடி!

இரண்டாவதாக, கைவிடப்பட்ட அந்தப் பெண்கள், நகரிலுள்ள பல்வேறு காலிவீடுகளை ஆக்கிரமித்திருக்கிறார்கள். அதற்கு என்ன தீர்வு காண்பது என்பது இன்னொரு மண்டையடி!

### மதுரையில் உண்ணாவிரதமிருந்த
# மின்சார ஊழியர்கள் 8 பேர் கைது

மதுரை, நவ 12—
தமிழக மின்சார வாரியத்தில் பணியாற்றும் அலுவலக ஊழியர்களின் தீர்க்கப்படாதகோரிக்கைகளை நிறைவேற்றக்கோரி இங்குஇன்று உண்ணாவிரதமிருந்த 8 மின்சார ஊழியர்களை போலீசார் கைது செய்தனர்.

தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கம் (சிஐடியூ)சார்பில் மதுரை மத்திய அலுவலகம் முன்பு இந்த உண்ணாவிரதம் நடந்தது.

உண்ணாவிரதமிருந்த சங்கத்தின் மாநிலப் பொருளாளர், திட்டச் செயலாளர் உட்பட 8 தோழர்களையும் காவல் துறையினர் கைது செய்து லாரிகளில் ஏற்றிச் சென்றனர்.

செலவினப்பகுதிகளுக்கு ஊழியர்களை நியமித்தல், வேலை நிர்ணயம் செய்தல் பதவி உயர்வுகளுக்கான தேர்வுகளை ரத்துச்செய்தல், காலியாக உள்ள எழுத்தர் பதவிகளில் நாட்கூலித் தொழிலாளர்களை எழுத்தர்களாக நியமித்தல், சம்பள ஏற்றத்தாழ்வுகளை நீக்குதல், கூடுதல் நேரவேலைக்கு இரட்டிப்புச் சம்பளம் வழங்குதல் பழிவாங்கும் ஊர்மாற்றங்களை ரத்துச் செய்தல் ஆகிய கோரிக்கைகளை வலியுறுத்தி இந்த உண்ணாவிரதக் கிளர்ச்சி நடந்தது.

# தொழிலாளர் நலன்கள் பாதுகாக்கப்படும் என்கிறார் பிரதமர்

புதுடெல்லி, நவ. 11—
தொழிலாளி வர்க்கத்தின் உரிமைகள் பற்றி இந்திய அரசாங்கம் கவனத்தில் கொண்டுள்ளதாம். அவர்களுடைய நலன்களை இந்திய அரசாங்கம் பாதுகாக்குமாம்.

இன்று இரவு 8 மணிக்கு ரேடியோவில் ஒலிபரப்பப்பட்ட இந்திரா காந்தியின் பேச்சில் அவர் மேற்கண்ட உறுதிமொழிகளை தொழிலாளி வர்க்கத்துக்கு தெரிவித்துள்ளார்.

அவர் தனது பேச்சில் போனஸ் அவசரச்சட்டம் பற்றியும் குறிப்பிட்டார். அச்சட்டம் பெரும் விவாதத்திற்குள்ளாகியுள்ளது என்றும் உற்பத்தி அதிகரிப்பே இன்று மிகத்தேவையாக உள்ளது என்றும் நாட்டு நலன் காரணமாக உற்பத்தித்திறன் அதிகரிப்போடு போனசை இணைக்கவே முடிவு செய்துள்ளது என்றும் அவர் தெரிவித்தார்.

மேலும், "அரசாங்கம் உங்களுக்கு என்ன செய்தது என்று கேட்காதீர்கள் நாட்டுக்கு நீங்கள் செய்தீர்கள் என்பதை உங்களிடமே கேட்டுகொள்ளுங்கள். உங்களது கடமைகளைநாட்டுக்கு செய்யுங்கள்" என்றும் கூறினார்.

அவசரநிலை குறித்து கூறும்போது, மாணவர்கள் பள்ளிக்கூடங்களுக்கு செல்ல விரும்புகிறார்கள், தொழிலாளர்கள் வேலைநிறுத்தில் செய்வதில்லை என்பதை அவசரநிலை எடுத்துக் காட்டியுள்ளது என பிரதமர் இந்திரா காந்தி தனது பேச்சில் கூறியுள்ளார்.

மேலும், பண வீக்கத்தை எதிர்த்து அரசாங்கம் நடத்திய போராட்டத்தில் குறிப்பிடத்தக்கவெற்றி ஏற்பட்டுள்ளதாம். மொத்த வியாபார விலைகள் 8 சதவீதம் வரை குறைந்துள்ளதாம். பொதுத் துறைகளில் 15 சதவீத உற்பத்தி பெருகியுள்ளதாம். கடந்த காலத்தில் கவனிக்கப்படாத விவசாயத் தொழிலாளர்கள் அவர்களது அடிமை முறையிலிருந்து விடுபட்டுள்ளார்களாம்.

50 லட்சம் பேருக்கு வீட்டுமனை வழங்கப்பட்டுள்ளது என்றும் 30 லட்சம் ஏக்கர் நிலம் புதிதாக விவசாயத்துக்கு கொண்டுவரப்பட்டுள்ளது என்றும்பிரதமர் தனது ரேடியோ உரையில் கூறியுள்ளார்.

## 500 ஆண்டுகளாக காலனி பாதிக்கத்தில் அடிமைப்பட்டிருந்த ஆப்பிரிக்க நாடு
# அங்கோலா சுதந்திரமடைந்தது

லுவாண்டா, நவ. 12—
ஆப்பிரிக்காக் கண்டத்தில், கடந்த ஐந்நூறு ஆண்டுகளாக காலனியாதிக்கத்தின் கீழ் அடிமைப் பட்டுக்கிடந்த அங்கோலா எனும் நாடு, புதிய போர்ச்சுக்கல் ஆட்சியாளரால் கடந்த 11 ந் தேதி சுதந்திரம் அளிக்கப்பட்டது.

#### சுதந்திரப் பிரகடனம்

அந்நாட்டின் பெரும்பகுதி மக்களின் பிரதிநிதியாக விளங்கும் அங்கோலா மக்கள் விடுதலை இயக்கம் (எம் பி எல் ஏ) அந்நாடு முழுமைக்குமான சுதந்திரத்தைப் பிரகடனம் செய்தது.

அங்கோலாவிலிருந்து புதிய போர்ச்சுக்கீசிய அரசின் ஹைகமிசனரான அட்மிரல் லியோனல் கட்டோசோ, அங்கோலாவுக்கு சுதந்திரம் அளித்துவிட்டு தனதுமாளிகையிலும்கோட்டையிலும் பறந்து கொண்டிருந்த போர்ச்சுக்கீசிய கொடிகளை இறக்கி எடுத்துக் கொண்டு அங்கோலாவிற்கு புறப்பட்டார் அவர்புறப்பட்ட எட்டரை மணி நேரத்துக்கு பின்னால்—இந்த சுதந்திரப் பிரகடனம் செய்யப்பட்டது.

அந்நாட்டின் பெயரை 'அங்கோலா மக்கள் குடியரசு' என்று அந்தக்கட்சி அறிவித்தது அக்கட்சியின் தலைவரான அகஸ்டினோ நெட்டோ அங்கோலா மக்கள் குடியரசின் ஜனாதிபதியாக பதவி ஏற்றார்.

அங்கோலா நாட்டின்விடுதலைக்காகப் போராடிய 3 ஸ்தாபனங்களில்—எம் பி எல் ஏ என்ற கட்சிக்கு அங்கோலாவின் தலைநகரான லுவாண்டாவிலும், மத்திய பகுதியிலும், கடற்கரையோரப் பகுதியிலும் முழுமையாக செல்வாக்கு உள்ளது.

#### சோவியத் அங்கீகாரம்

அகஸ்டினோ தலைமையிலான அரசாங்கத்தை சோவியத் யூனியன், கியூபா ருமேனியா போன்ற சோசலிஸ்ட் நாடுகளும், கினியா பிரேசில், பிரசவில்லி காங்கோ மொசாம்பிக் பிபான்ற சுதந்திரமடைந்த ஆப்பிரிக்க நாடுகளும் அங்கீகரித்துள்ளன.

#### போட்டிப் பிரகடனம்

அகஸ்டினோ தலைமையிலானஎம்பிஎல்ஏகட்சிதலைநகரிலிருந்து, "அங்கோலா மக்கள் குடியர"சை பிரகடனப்படுத்தியுள்ள அதே சமயத்தில், அண்டைநாடான ஜெயர் நாட்டின் ஆதரவைப் பெற்றவரும், எப் எல் என் ஏ என்ற மற்றொரு அங்கோலா விடுதலை ஸ்தாபனத்தின் தலைவருமான ஹோல்டன் ராபர்டோ லுவாண்டாவுக்கு 150 மைல் தொலைவிலுள்ள ஆம்ப்ரீஸ் நகரிலிருந்து போட்டிப் பிரகடனம் ஒன்றைச் செய்துள்ளார்.

நாட்டின் வடக்குப்பகுதியில் மட்டுமே செல்வாக்கு பெற்றுள்ள இக்கட்சி தனது பிரகடனத்தில் "அங்கோலா மக்கள் ஜனநாயகக் குடியரசு" என்று குறிப்பிட்டுள்ளது.

அங்கோலாவின் முக்கிய துறைமுகமான லோபிடோ, மற்றொரு விடுதலை இயக்க ஸ்தாபனமான அங்கோலா முழு சுதந்திர தேசிய யூனியன் ('யூனிட்டா') வசம் உள்ளது,

எப் என் எல் ஏ வும் யூனிட்டாவும் கூட்டாகச் சேர்ந்து ஒப்பந்தம் ஒன்றைச் செய்துள்ளன, எம் பி எல் ஏ, க்கு எதிராக இந்த இரு கட்சிகளும் கையெழுத்திட்டுள்ள, இந்த ஒப்பந்தத்தில். 24 பேர் கொண்ட ஒரு ஆளும் புரட்சிக்குழுவை அமைக்கஒப்புக் கொண்டுள்ளன.

#### சுதந்திரவிழாவில் வெளிநாட்டுபிரதிநிதிகள்

எம். பி. எல். ஏ. கட்சி சார்பில் லுவாண்டாவில் நடத்தப்படும் சுதந்திர விழாவில் கலந்து கொள்ள பல நாடுகளின் பிரதிநிதிகளும் வந்து கொண்டிருக்கின்றனர். மொசாம்பிக், நைஜீரியா, பிஸ்ஸலோ, டிமோர், ருமேனியா ஆகிய நாடுகளின் பிரதிநிதிகள் வந்துள்ளனர்.

இந்த விழாவில் போர்ச்சுக்கீசிய முதுநிலை அதிகாரி யாரும் கலந்து கொள்ள மாட்டார்கள் என்று அறிவித்துள்ளது. போர்ச்சுக்கல் நட்பு பிரகடனக் கடிதம் ஒன்றை அனுப்பியுள்ளது

ஆனல், போர்ச்சுக்கல் கம்யூனிஸ்ட் கட்சிப் பிரதிநிதிகளும் புரட்சி ஐக்கிய முன்னணி பிரதிநிதிகளும் லுவாண்டாவில் தங்கி சுதந்திர விழாவில் கலந்து கொள்வார் என்றும் லிஸ்பனில் அறிவிக்கப்பட்டுள்ளது.

#### கிசிங்கர் சீறுகிறார்

எம் பி எல் ஏ கட்சிக்கு சோவியத்யூனியனும், கியூபாவும் ஆதரவு தெரிவித்து உதவி செய்வது கண்டு அமெரிக்க வெளிநாட்டு அமைச்சர் ஹென்றி கிசிங்கர் சீறுகிறார் இவ்வாறு உதவுவதை "கடுமையான விஷய"மாக அமெரிக்கா கருதுவதாக வாசிங்டனில் செய்தியாளர்களிடம் கிசிங்கர் கூறினாராம்.

### வெண்மணி தியாகிகள்
# நினைவுச் சின்னம் புதுப்பிக்க நிதி வசூல்

திருவாரூர். நவ. 11—
தமிழகத்தில் நிலப்பிரபுத்துவக் கொடுமையின் அழியாச் சின்னமாக—உரிமைப் போராட்டத்தில் உயிரை இழந்த செம்மலர்களின் நினைவாக கீழ வெண்மணியில் எழுப்பப்பட்டுள்ள வெண்மணி தியாகிகள் நினைவுச் சின்னத்தை மேலும் புதுப்பித்து சிறப்பிக்கும் பணியினை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நாகை வட்டக் குழு மேற்கொண்டுள்ளது.

இப்பணி செவ்வனே நடந்தேற நிதி வசூல் செய்யப்படுகிறது.

## ஆஸ்திரேலியாவின் அமைச்சரவை டிஸ்மிஸ்

கான்பெர்ரா, நவ. 11—
ஆஸ்திரேலியாவின் பிரதமர் காவ்விட்லாம், அந்நாட்டு கவர்னர் ஜெனரலால் பதவி நீக்கம் செய்யப்பட்டார்.

மேலும், ஆஸ்திரேலிய நாடாளுமன்றத்தின் இரு சபைகளையும்—பிரதிநிதித்துவ சபை, செனட் சபை—கலைக்குமாறும், டிசம்பர்13-ல் பொதுத் தேர்தல் நடத்துமாறும் உத்திரவிட்டார்,

தேர்தல் நடக்கும்வரை, எதிர்க் கட்சியின்தலைவரான மால்காலம் பிரேஜர், அரசாங்க நடவடிக்கை கவனிப்பவராக நியமிக்கப்பட்டுள்ளார்.

பிரதிநிதித்துவ சபையில் காவ்விட்லாமின கட்சியான தொழிற்கட்சி மெஜாரிட்டியாக உள்ளது கவர்னர் ஜெனரல் மீது நம்பிக்கை இல்லை என்றும் காவ்விட்லாமை நாட்டின் பிரதமராக மறுபடி நியமிக்குமாறும் கோரி பிரதிநிதித்துவ சபையில்தீர்மானம்நிறைவேற்றப்பட்டது.தீர்மானத்திற்குஆதரவாக 64 வோட்டுகளும்எதிராக 55 வோட்டுகளும் பதிவாயின. எனினும், நாடாளுமன்றத்தைக் கலைத்து டிசம்பர் 13-ல் தேர்தல் நடத்துமாறு கவர்னர் ஜெனரல் பிராசர் அறிவித்தார்.

செனட்சபையில்எதிர்க் கட்சியினர் பலமாக உள்ளனர். அச்சபையில் ஏற்கெனவே, பண ஒதுக்கீடு சம்பந்தமான அரசாங்கத்தின் இரு தீர்மானங்களை செனட் சபையில் எதிர்க் கட்சியினர் தோற்கடித்தனர்.

இதனால், அரசாங்கத்தின் நிர்வாகம் பெரும்சிக்கலுக்குள்ளாகியது.

புதிதாக பொதுத் தேர்தல் நடத்த ஒப்புக்கொண்டால்தான் பண ஒதுக்கீடு தீர்மானங்களை செனட் சபையில் நிறைவேற்றித்தருவோம் என மிதவாதக் கட்சியினரான எதிர்க்கட்சியினர் கூறினர். ஆனாலும் காவ்விட்லாம், தொடர்ச்சியாக தனது அரசாங்கத்தை நடத்தி வந்தார்.

இதன் தொடர்ச்சியாக கவர்னர் ஜெனரலுக்கும் பிரதமர் விட்லாமுக்குமிடையே கருத்து வேறுபாடுகள் அதிகரித்தன. எனவே, கவர்னர் ஜெனரல், விட்லாமின் அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்துவிட்டார்.

விட்லாமின் அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்ட செய்தி பரவியவுடன் பெரும்கூட்டம் நாடாளுமன்றம் முன்பு கூடியது.விட்லாம் அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்ததை எதிர்த்து கண்டன ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

விட்லாமின் தலைமையிலான தொழிற்கட்சி அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்ததைக் கண்டித்து நாடு தழுவிய ஸ்டிரைக்கை, தொழிலாளர்கள் மேற்கொள்ளக் கூடும் என்றும் தெரிகிறது

## நவம்பர் புரட்சி தின பொதுக்கூட்டம்

வீரவநல்லூர், நவ. 12—
நவம்பர் புரட்சி தினத்தை முன்னிட்டு கடந்த 7-ந் தேதி இங்கு காந்தி சிலை முன்பு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மற்றும் சி ஐ டி யூ சார்பில் பொதுக்கூட்டம் நடந்தது. வாலிபர் முன்னணி தலைவர் டாக்டர் முத்துக்கிருஷ்ணன் தலைமை வகித்தார்.

சோசலிசத்தின் சாதனை, முதலாளித்துவத்தின்சீரழிவு இந்தியாவின் இன்றைய அரசியல் — உழைப்பாளர் களது கடமை ஆகியவை குறித்து திண்டுக்கல் எஸ். ஏ. தங்கராஜ், சிங்காநல்லூர் பி சொரணம், வீரவநல்லூர் எஸ். கே. பழனிச்சாமி பி. திருச்சிற்றம்பலம் ஆகியோர் பேசினர்.

கோமதி மில் தொழிலாளர்களது போராட்டத்துக்கு ஆதரவு தெரிவித்தும், இதில் அரசும் அதிகாரிகளும் தலையிட்டு தொழிலாளர்களுக்கு நியாயம் வழங்கக் கோரியும் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

## பிரிட்டன், இந்திய மருத்துவ துறைகளிடையே
# மோதல் நடக்கிறது

புதுடெல்லி, நவ 11—
பிரிட்டனின் மருத்துவ மேற்படிப்புக் கல்வித் தகுதியை அங்கீகரித்ததை தான வாபஸ் பெற்றுக் கொள்ளப் போவதாகஇந்தியமருத்துவக் கவுன்சில் அறிவித்துள்ளது.

ஆனல் பிரிட்டனின் மருத்துவ பட்ட மேற்படிப்பு தகுதிகள் 1977-ம் ஆண்டு மார்ச்சு மாதம் வரை அங்கீகரிக்கப்படும் என்றும் அக கவுன்சில் அறிவித்துள்ளது

இதன்படி 1977-ம் ஆண்டு மார்ச்சு மாதத்திற்குள் பிரிட்டனின் மருத்துவ படிப்பை முடித்தவர்களே இந்தியாவில் மருத்துவ டாக்டர்களாக ஏற்றுக் கொள்ளப்படுவர். பின்னர் பிரிட்டனில் மருத்துவ பட்ட மேற்படிப்பு படித்தவர்கள் இந்தியாவில மருத்துவ சேவையோ மருத்துவ தொழிலோ செய்பமுடியாது.

1977-ம் ஆண்டு மார்ச் வரை அம்மருத்துவக் கல்வியை அங்கீகரிப்பது என்பதற்கான விதிகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

பிரிட்டன் மருத்துவக் கல்வி சம்பந்தமாக இந்திய மருத்துவக் கவுன்சில் எடுத்துள்ள இம்முடிவு "வரலாற்று முக்கியத்துவமான முடிவு" எனஅக்கவுன்சிலின் தலைவர் பி என் சின்ஹா என்பவர் கூறினர்.

மேலும்.இம்முடிவானது நாட்டின கண்ணியத்தை நிலை நிறுத்தவும், இந்திய மருத்துவ படிப்புகளின் முறையான தகுதிகளுக்கு பாதுகாப்பு அளிக்கவும் மேற்கொள்ளப்பட்டதாம. இதனை சின்ஹாவே தெரிவித்தார்.

மேலும், இந்திய மருத்துவப்படிப்புத் தகுதியை அங்கீகரித்த பிரிட்டன பொது மருத்துவ கவுன்சில், கடந்த மே மாதம் அந்த அங்கீகரிப்பை வாபஸ்பெற்றுக கொண்டது. எனவேதான், இந்திய மருத்துவப்படிப்பின் பெருமையைக் காப்பாற்ற இந்திய மருத்துவக் கவுன்சில், பிரிட்டனின் மருத்துவ படிப்பு தகுதிககான அங்கீகரிப்பை வாபஸ் பெற்றுக் கொள்கிறது என்றும் கூறினர்.

## பொதுத் துறைக்கு சேர்மனாக உள்ள தொழில் அதிபரின் கோரிக்கை

கோயம்புத்தூர், நவ. 11—
உரத் தொழிற்சாலைகளில் உரங்கள் தேங்கிக் கிடக்கின்றன. எனவே, கணிசமாக உரங்களின் விலைகளை குறைக்கவேண்டும் என்று தொழில் முதலாளி என. மகாலிங்கம்கூறியுள்ளார்.

உரவிலையை குறைக்கச் சொல்லும் இவர் அரசாங்கம் நடத்தும் சென்னை உரத் தொழிற்சாலையின் சேர்மன்.

மேலும், அன்னிய நாட்டிலிருந்து அதிகமான விலைக்கு 10 லட்சம டன் உரம் இறக்குமதி செய்தது பற்றி விசாரணை நடத்த வேண்டும் என்றும் அன்னிய நாட்டிலிருந்து உரம் இறக்குமதி செய்ததுதான் இந்தியாவின் உரவிலைகள் உயர்ந்ததற்கு காரணம் என்றும் அந்தவிலை விவசாயிகளுக்கு அதிக விலையாகும் என்றும் கூறினர்.

## போராடும் பாரி மிட்டாய் தொழிலாளர் உதவி நிதி

ஆட்குறைப்பு,
லே-ஆப் ஆகிய
இரண்டையும் எதிர்த்து
கடந்தசுமார் 5 மாதகாலமாக
போராடிவரும்
நெல்லிக்குப்பம் பாரி
மிட்டாய்த்
தொழிலாளர்களுக்கு
சகோதர ஆதரவைத்
தெரிவிக்கும் பொருட்டு
இன்றே

**நிதி அனுப்புவீர்!**

**நிதி அனுப்ப வேண்டிய முகவரி**
சி. கோவிந்தராஜன்
1. ஸ்கூல் தெரு,
நெல்லிக்குப்பம்.

# சீனவுக்கு நீவின் பயணம்

ரங்கூன், நவ. 13—
பர்மாநாட்டின அதிபர் நீவின் கடந்த 11 ந் தேதி சீனவுக்குப் பயணமானர். அவர் அங்கு 5 நாட்கள் சுற்றுப்பயணம் மேற்கொள்வார். அவருடன் அரசாங்க அதிகாரிகள்பலரும் சென்றுள்ளனர்.

## ராஜஸ்தானில் தாதுக்கள்

ஜெய்ப்பூர், நவ. 10—
ராஜஸ்தான மாநிலத்தில் பூமிக்கடியில் இருக்கும் துத்தநாகம், ஈயம், கந்தகம், பாஸ்பேட் முதலியவற்றின் தாதுக்களது மதிப்பு 8 ஆயிரத்து 31 கோடியாகும். இது இன்றைய மார்க்கெட் மதிப்பிலாகும். இதனைஇந்திய பூகோள சாஸ்திர ஆய்வு ஒன்று கூறியுள்ளது.

3 லட்சத்து 42 ஆயிரத்து 627 சதுர கிலோ மீட்டர் பரப்பளவு உள்ளராஜஸ்தானில் 67 ஆயிரத்து [illegible] சதுர கிலோ மீட்டர் அளவில் அத்தாதுப் பொருட்கள் இருப்பதாகவும் [illegible] சர்வே கூறுகிறது.

தீக்கதிர்

# விடுதலை பெற்ற ஒரு சுதந்திர நாட்டின் வேதனைகள்

ஐந்நூறு ஆண்டுகளுக்குமேல் போர்ச்சுக்கீசிய ஏகாதிபத்திய ஆட்சியின்கீழ் அடிமைப்பட்டிருந்த அங்கோலா நவம்பர் 11ம் நாள் ஒரு சுதந்திர நாடெனப் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது.

இதனை வெளியிட்டவர் போர்ச்சுக்கல்லின் பிரதிநிதியாக அங்கிருந்த தளகர்த்தர் கார்பேடாசா என்பவர். "அங்கோலா நாடு நவம்பர் 11ம் நாளிலிருந்து ஒரு சுதந்திர நாடு" என்று அவர் அறிவித்து போர்ச்சுக்கல்லின் கொடியை இறக்கினர். அதன் பின்னர் தலைநகரான லுவாண்டாவிலிருந்து எஞ்சியிருந்த போர்ச்சுக்கீசிய சிப்பாய்களை கப்பலில் ஏற்றிக்கொண்டு தன் நாட்டிற்குப் பயணமானர்.

அங்கோலாவின் விடுதலைக்காக ஆயுதந்தாங்கிப் போராடிய தேச விடுதலைப் போராட்ட சக்திகளிடம் நேரடியாக அதிகாரத்தை ஒப்படைக்கவில்லை. போர்ச்சுக்கல்லின் ஏனைய காலனிகளான கினிபிசோ, கேப்வெர்டே, மொசாம்பிக் ஆகிய நாடுகளில் விடுதலைக்காகப்போராடிய கட்சிகளிடம் அதிகாரத்தை ஒப்படைத்தது போல செய்யாமல் பதிய போர்ச்சுக்கல்லின் பிரதிநிதிகள் தாங்களாகவே சுதந்திரப் பிரகடனம் செய்துவிட்டு வெளியேறியுள்ளனர்.

இதற்குக்காரணம் என்ன?

அங்கோலாவின் விடுதலை இயக்கம் ஒரு கட்சியின் அல்லது கட்சிகளின் கூட்டணி ஒன்றின் தலைமையில்நடைபெறவில்லை. மாருக மூன்று விதமான அமைப்புகள் தனித் தனியே போராட்டங்களை நடத்தின. ஒன்று எம், பி, எல் ஏ, என்ற அமைப்பு. இதை சோவியத்நாடு போன்ற சில சோசலிச நாடுகள் ஆதரித்து வந்தன.

இரண்டாவது எப் என் எல் ஏ என்ற அமைப்பு அங்கோலாவிற்கு வடக்கே அண்டைநாடாக விளங்கும் காங்கோ (இன்று அதன்பெயர். ஜெயிரே) என்ற நாடு அங்கீகரித்து உதவிவந்தது, ஜெயிரேயின் தலைவர் மொபுட்டு. இவர் முன்பு லுமும்பா என்ற காங்கோவின் தேசிய விடுதலைத் தலைவனைக்கொன்றவர். லுமம்பாவை பலாத்காரமாக பதவியிலிருந்து அகற்றிவிட்டு அதிகாரத்தைக் கைப்பற்றிய இராணுவ தளகர்த்தர். அங்கோலாவில் இவர் மூலம் அமெரிக்காவின் தலையீடு பல ஆண்டுகளாக நடந்து வருகிறது அங்கோலாவின் வடபகுதியிலுள்ள எண்ணை வளமிக்க கபிண்டா பகுதியை எப்படியாவது தன் கையாட்கள் மூலம் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர வெகுகாலமாகவே அமெரிக்கா முயன்று வந்தது. போர்ச்சுக்கலின் ஆதிக்கம் அங்கோலாவில் வீழ்ச்சி அடையப் போகிறது என்பது தெரிந்த உடனே, அங்கோலாவின் மற்றொரு விடுதலை இயக்க கட்சியான எப். என். எல். ஏ யைத் தன் கைக்குள் போட்டுக்கொள்ள முயன்றது. வெற்றியும் கண்டது. ஜெயிரேத் தலைவன் மொபுட்டுவுடன நெருங்கிய உறவு கொண்டவரே எப். என். எல். ஏ யின் தலைவர். அங்கோலாவின் வடபகுதியில் செல்வாக்குள்ள இவர் அமெரிக்காவுடன நெருக்கமான தொடர்பு கொண்டு செயல்பட்டு வந்தார். இவருக்கு நவசீனம் உதவி செய்துவருகிறது என்று ஐ நா வில் ஒரு குற்றச்சாட்டு எழுந்தபோது சீனத்தின் பிரதிநிதி அதை மறுத்துள்ளார்.

மூன்ருவது அமைப்பு யூனிட்டாஎன்ற ஸ்தாபனம். இதனுள் போர்ச்சுக்கீசிய அதிகாரிகள், கலப்பு இனத்தவர் கணிசமாக உள்ளனர். அங்கோலாவின் தெற்குப் பகுதியில் சிறிதளவு செல்வாக்கு உண்டு. இவர்களைப் பயன்படுத்திக்கொண்டு, அங்கோலாவுக்கு தெற்கே தென்னுப்பிரிக்க இன வெறியர்களின் பிடியிலுள்ள நமீபியா என்னும் காலனிநாட்டின் வழியாக பல சதிவேலைகள் நடைபெறுகின்றன. அங்கோலாவின் தெற்குப்பகுதியிலுள்ள மின்சார உற்பத்தி செய்யும் பெரிய அணை ஒன்றை தென்னுப்பிரிக்க இனவெறியர்கள் புகுந்து கைப்பற்றிவைத்திருக்கினறனர்.

இந்தச் சூழ்நிலையில்தான், புதிய போர்ச்சுக்கல் அரசு, அங்கோலாவை ஒரு சுதந்திரநாடாகப் பிரகடனம் செய்து விட்டுவெளியேறியுள்ளது.

போர்ச்சுக்கல் வெளியேறிய மறுகணமே, அங்கோலாவின் தலைநகரிலும், மத்திய பாகத்திலும், கடற்கரைப்பகுதியிலும் கணிசமான செல்வாக்குள்ள எம். பி எல் ஏ எனனும் விடுதலைப் போராடட கட்சி அங்கோலா முழுமைக்குமான சுதந்திர அரசின் அதிகாரத்தை தான் மேற்கொண்டுள்ளதாகப் பிரகடனம் செய்துள்ளது. தலைநகரமான லுவாண்டாவில் எம் பி எல் ஏயின் தலைவரான டாக்டர் அகஸ்டினே நெட்டோ என்பவர் நவம்பர் 11ம் நாள் அங்கோலா மக்கள் குடியரசு தலைவர் என்று அறிவிக்கப்பட்டுள்ளார்.

இதனை சோவியத்யூனியன், கியூடா, ருமேனியா போன்ற சோசலிச நாடுகளும், கினியா பிரசவில்லி காங்கோ, மொசாமபிக் போன்ற சுதந்திர ஆப்ரிக்கா நாடுகளும் அங்கீகரித்துள்ளன புதிய குடியரசுவெற்றிக்கு சகல உதவியும் அளிக்கப் போவதாகவும் இந்நாடுகள் அறிவித்துள்ளன.

அதே சமயத்தில் எப் என் எல் ஏ பிடிப்பிலுள்ள வடக்குப் பகுதியிலும், அதன் தலைவர்வேறு ஒரு சிறு நகரத்தைத் தலைநகராகக்கொண்டு புதிய குடியரசை நிறுவியுள்ளதாக அறிவிக்கிருர்.

சோவியத்யூனியனும் ஏனைய சோஷலிச நாடுகளும் டாக்டர் அகஸ்டினே நெட்டோ தலைமையிலுள்ள புதிய குடியரசை அங்கீகரித்ததற்கு அமெரிக்காவின் வெளிவிவகார மந்திரிடாக்டர் கிசிஞ்சர்கடுமையான ஆட்சேபனை எழுப்பியுள்ளார் சோவியத் யூனியன் ஆதிக்க நோக்கத்துடன் இந்தச் செயலில்ஈடுபட்டதாகக்கூறி எதிர்க்கிருர்.

இவ்வாறு அங்கு இன்றுள்ள சூழ்நிலையில் அங்கோலாவின் மக்கள் தங்களது சுதந்திர உரிமையை நிலைநாட்டிக் கொள்ளவும் ஏகாதிபத்தியச் சதிகளிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் பிளவுபட்டிருக்கும் சக்திகளை ஒன்றுபடுத்தவும் கடுமையான போராட்டங்களைத் தொடர்ந்து நடத்த வேண்டிய நிலைமையில் வைக்கப்பட்டுள்ளனர்.

# இஸ்ரேலின் யூதவெறிக்கு ஐ.நா. சபை கண்டனம்

ஐக்கியநாடுகள், நவ. 11—

இஸ்ரேல் நாடு கடைபிடிக்கும் யூதவெறியானது, நிறவெறித்தனமானது நிறவெறி குற்றங்களை உடையது என ஐ நா சபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

142 நாடுகள் உறுப்பினர்களாக உள்ள ஐ நா சபையில் 117 நாடுகள், இத் தீர்மானத்திற்கு ஆதரவாக வாக்களித்தன. 19 நாடுகள் எதிராக வாக்களித்தன.

ஐ நா சபையின் சமூக, மனிதாபிமான கமிட்டியால் அனுப்பப்பட்டது.

அரபுநாடுகள், சோசலிஸ்ட் நாடுகள், 3வது உலக நாடுகள் இத்தீர்மானத்திற்கு ஆதரவாக வாக்களித்தன.

அமெரிக்கா, இஸ்ரேல் ஆகிய நாடுகளும் பிரிட்டன் பிரான்சு, மேற்கு ஜெர்மனி, பெல்ஜியம்போன்ற ஐரோப்பிய பொது மார்க்கெட்டை சேர்ந்த 9 ஐரோப்பிய நாடுகளும், ஆஸ்திரேலியா, கனடா ஆகிய நாடுகளும் தீர்மானத்திற்கு எதிராக வாக்களித்தன.

பாலஸ்தீனத்தை யூதர்கள் தங்களதுதேசியநாடாக கூறுவதால் யூதவெறி நிறவெறித் தன்மை கொண்டது என்று தீர்மானத்திற்கு ஆதரவாக வாக்களித்தவர்கள் கூறினர்.

தீர்மானத்தை எதிர்த்து பேசியவர்களில் ஐநாசபைக்கான அமெரிக்காவின் பிரதிநிதி மொய்னிஹான் ஆத்திரத்துடன் பேசினுர். அவர் பேசும்போது, இரண்டாவது உலகப் போரில் 60 லட்சம் ஐரோப்பிய யூதர்களை கொலை செய்த கொலைகாரர்களுக்கு அடையாளப் பூர்வமான ஆதரவை ஐ நா சபை கொடுக்கிறது என்று கூறினர்.

பாலஸ்தீன மக்களின் நியாயமான உரிமைகளைத் தீர்மானித்தும், மத்திய கிழக்கு பகுதி சம்பந்தமான சமாதானம பிரச்சினைகள் மீது பேச்சுவார்த்தைநடத்த பாலஸ்தீன விடுதலை இயக்கமும் கலந்து கொள்ள அனுமதிக்க கோரியும் இரு தீர்மானங்கள் ஐ நா சபையில் நிறைவேற்றப்பட்டன.

மேலும் தென் ஆப்ரிக்க நாட்டில் நிலவும நிறவெறி சம்பந்தமாகவும மூன்று தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

தென் ஆப்ரிக்காவின் நிறவெறியை எதிர்த்து போராடுவதற்கான பத்தாண்டு திட்டம் நிறைவேற்றுவது என ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது,

நிறவெறிக் கொடுமைகளை ஒழிப்பது பற்றி 1978ம் ஆண்டில் கானுவில் மாநாடு ஒன்று நடத்துவது எனவும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# திருவாரூரில் கல்லூரி மாணவர்கள் கூட்டம்

திருவாரூர், நவ. 11—

இங்குள்ள கலைஞர் கருணாநிதி அரசினர் கலைக் கல்லூரியில் இந்திய மாணவர் சங்க [எஸ் எப் ஐ] அமைப்புக் கூட்டம் கடந்த 8-ந் தேதி நடந்தது.

இக்கூட்டத்தில், இந்திய மாணவர்சங்கத்தின் தஞ்சை மாவட்டக் குழு உறுப்பினர் தோழர் வி பி மகாலிங்கம் கலந்து கொண்டு மாணவர்களின கடமைகளை விளக்கினுர். கூட்ட இறுதியில் மாணவர் அமைப்புக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.




# கீழ்பவானி விவசாயிகள் வாழ்க்கையில் மறுமலர்ச்சி ஏற்பட...?

ஐயா,

கோவை மாவட்டத்தில் பவானி சாகர் அணைகட்டப்பட்டு சுமார் 15 வருடங்களுக்கு மேல் ஆகிறது. அதிலிருந்து, இரண்டு லட்சத்து பத்தாயிரம ஏக்கர் நிலங்களுக்கு தண்ணீர் பாய வாய்க்கால்களும் தேவையான மதகுகளும் கட்டப்பட்டுள்ளன. ஏக காலத்தில் அனைத்து நிலங்களுக்கும் தண்ணீர் கொடுக்கவாய்ப்பு இருப்பினும மொத்த விஸ்தீரணம் 2 இலட்சத்து 10 ஆயிரம் ஏக்கரை இரு பிரிவாக பிரித்துஒருபிரிவுக்கு [ஒருபிட்டு] மட்டும அதாவது ஒரு இலட்சம் ஏக்கர் நிலங்களுக்கு மட்டும் ஒவ்வொரு வருடமும் தண்ணீர்கொடுக்கிருர்கள். இதனல் விவசாயிகளுக்கு இரண்டுவருடத்துக்கு ஒருதடவைதான் பாசனம் செய்ய தண்ணீர் கிடைக்க வாய்ப்பு ஏற்படுகிறது. இது தான் உண்மை.

உதாரணமாக, ஜூலை மாத கடைசியில் தண்ணீர் கொடுத்து டிசம்பர் இறுதியில் நிறுத்தி விடுகிருர்கள். அதன்பின் அணையில தண்ணீர் ஸ்டாக் இருக்காது, அவ்வாறு தண்ணீர் இருப்பினும ஜனவரிக்கு மேல் கோடை காலம் தொடங்குவதால் 2-பிட்டுக்கு தண்ணீர் கொடுப்பதில் சிரமம் இருக்கிறது. இத்தகைய காரணங்களால் பொதுப் பணித் துறை அதிகாரிகள் இரு பிட்டாக பிரித்து, இந்த வருடம் ஒருபிட்டுக்கு (சுமார்ஒரு இலட்சம் ஏக்கர் மட்டும்) அடுத்த வருடம் 2ம் பிட்டுக்கு ஒரு லட்சம் ஏக்கர் என்ற விகிதத்தில் தண்ணீர் கொடுத்து வருகிருர்கள். இதனல் பல்லாயிரககணக்கான சிறிய விவசாயிகள் இரண்டு வருடத்துக்கு ஒரு தரம் தான் தங்களது நிலத்துக்கு தண்ணீர் கிடைப்பதால் தாக்குப் பிடிக்க முடியாமல் கடன்காரர்களாக மாறி-சிறிது சிறிதாக தங்களது நிலத்தை இழந்து வருகின்றனர். விவசாய தொழிலாளர்களுக்கும் நிரந்தர வேலையும் கூலியும் கிடைப்பதில்லை. பவானி சாகர் பாசனம் 2 இலட்சம் ஏக்கர் நிலம் என்பது சுருக்கப்பட்டு ஒரு லட்சம் ஏக்கரில் சாகுபடி செய்யும் நிலை உள்ளது.

இதைமாற்றவேமுடியாதா என்ன? அரசு திட்டமிட்டு நடவடிக்கை எடுத்தால் முடியும்.

மத்திய, மாநில அரசுகள் செய்யவேண்டியது என்ன? பவானிசாகர் திட்டத்தை விரிவாக்கிசீர்திருத்த வேண்டும். பவானிசாகர் அணையின் மட்டத்தைசுமார் 20 அடிவரை உயர்த்த வேண்டும். மெயின் வாய்க்காலில் இரு கரைகளையும் சுமார் 5 அடியாவது உயர்த்தவேண்டும். அந்த வாய்க்காலில் கசிவு ஏற்படும்இடங்களிலும், கிளை வாய்க்கால்களையும் முழுமையாக சிமிண்டுபூசி சரிசெய்ய வேண்டும். 1-ம் நம்பர், 2-ம நம்பர் ஆகிய இரு பிட்டுகளுக்கும ஏக காலத்தில் 4 அல்லது 5 நாட்களுக்கு ஒரு தரம் தட்டுத் தடங்கல் இல்லாமல் சாகுபடிக்கு தண்ணீர் கிடைக்க ஏற்பாடு செய்யவேண்டும். எனவே மத்திய—மாநில அரசுகளும் இந்த நடவடிக்கைகளை மேற்கொள்வார்களேயானல்,

இங்குள்ள 2 லட்சம் ஏக்கரையும் சாகுபடி நிலமாக மாற்றமுடியும். அதனல் பல இலட்சம் சிறிய விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் பயன்பெறுவர். அவர்களது வாழ்க்கையில் மறுமலர்ச்சியும் ஏற்படும்.

இங்ஙனம்

எம். என். காளியண்ணன்
உதவிச்செயலாளர்
கோவை—நீலகிரி மாவட்ட
விவசாயிகள் சங்கம்

# பலவீனமான எண்ணங்களுக்கு இடம் கொடுப்பது நல்லதல்ல

## த. நா. ஸ்தாபன காங். தலைவர் அறிக்கை

சென்னை, நவ. 11—

தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் திரு பி. ராமச்சந்திரன் தமது கட்சி அணியினருக்கு ஓர் அறிக்கையினைவெளியிட்டுள்ளார்

அதன் சுருக்கம் வருமாறு;-

நமது கட்சியின் அமைப்புகளில் உள்ள அத்தனை நிர்வாகிகளும்—இளைஞர், மாதர் காங்கிரசைச் சேர்ந்த அனைத்து ஊழியர்களும்—சேவாதள தொண்டர்களும்—கட்சியின் சார்பு மன்றங்களாக விளங்கிடும் தேசிய சங்கங்கள், சிவாஜி ரசிகர் மன்றங்கள் ஆகியவற்றின் அங்கத்தினர்களும—நம்முடன் இணைந்துள்ள தேசிய தொழிற்சங்க பிரதிநிதிகளும்—அனைத்து கல்லூரிகளையும் சேர்ந்தமாணவர் காங்கிரசின் பொறுப்பாளர்களும் தாழ்த்தப்பட்டோர் லீகினைச் சேர்ந்த சகோதரர்களும் எந்தவிதமான தடுமாற்றங்களுக்கும் இடமின்றி உறுதியுடன் இருப்பது நம் அனைவருக்கும் பாவசு உணர்ச்சியைக் கொடுக்கின்றது. அதுவே சிலருக்கு பெருத்த ஏமாற்றத்தை கொடுக்கிறது ஆகவே, அவர்கள் சில வாதங்களை எழுப்பி குழப்புவது வேதனை அளிக்கின்றது. இனி வெற்றி வாய்ப்புகள் உண்டா என்பது தேர்தலைப் பற்றியே நினைப்போரின் கேள்வி. இனி கட்சிக்குப் பணம் கொடுப்பவர்கள் உண்டா என்றும் சிலர் யோசிக்கலாம். இனி தலைமை சரியான வழி காட்டுமா என்றும் சிலர் கேட்கலாம். இது அர்த்த மற்றதாகும்.

கட்சியைத் தொடர்ந்து வலுவுடன் நடத்த நினைப்பது விதிகளுக்கு உட்பட்ட உடன்பாடான இலட்சியம். வேறு எண்ணங்களுக்குத் தேவையில்லாமல் இடம் கொடுப்பது கட்டுப்பாட்டை சீர் குலைக்கும் முயற்சிகளாகும். கட்டுப்பாட்டை நிலை நாட்டுவதில் நம் தலைவர் காமராஜ் எந்த அளவிற்கு உயர்ந்து நின்ருர் என்பதை நாம் அனைவரும அறிவோம்.

ஒழுங்கை நிலைநாட்ட நாம் தலைவரின் வழியிலேயே போக வேண்டும். தொண்டர்கள் இது விஷயத்தில் மிக்க விழிப்புணர்ச்சியுடன் இருந்திட வேண்டுகிறேன்.

பெரியவர் மறைந்தவுடன் கட்சியை வலுப்படுத்துவதில் கவனம் செலுத்த வேண்டிய நாம், பலவீனமான எண்ணங்களுக்கு இடம் கொடுப்பது நல்லதல்ல என்பதே என் அபிப்பிராயம்.

தலைவர் காமராஜின் மறைவுக்குப் பிறகு கூடிய காரியக்கமிட்டி கூட்டத்தில் கட்சியின் எதிர்கால வளர்ச்சிக்கான ஆக்கப்பூர்வமான திட்டங்களைப் பொறுத்த மட்டில் அடித்தள ஊழியர்களைச் சந்தித்து முடிவு செய்யலாம் என்பது ஒட்டு மொத்தமான கருத்தாக பரிணமித்தது. நான் அதனை முழுமனதுடன் ஏற்று ஊழியர்களைச்சந்திக்க என்னுடன் வருவோரின் பெயர் பட்டியலை அறிவித்தேன். அதற்கான ஏற்பாடுகளிலும் நான் தீவிரமாக இருந்து வருகிறேன்.

இதற்கிடையில் ஊழியர்களைச் சந்திப்பது அவசியம்என்று யார் யார் வாதிட்டார்களோ அவர்களே, "அது தேவையில்லை என்று இன்று கருத்து தெரிவிக்கின்றனர். இந்த மாற்றத்திற்குக் காரணம் என்ன என்பது தெரியவில்லை. ஊழியர்களைச் சந்திப்பது அவசியமில்லை என்று விவாதம் செய்வது, தொடர்ந்த நடவடிக்கைகளுக்கு தடை செய்யும் முயற்சிகளாகும்ஊழியர்கள் இல்லாமல் கட்சி இல்லைஎன்பதில் எனக்கு அழுத்தமான நம்பிக்கை.

கிராம, வட்டார, நகர, தாலுகா, மாவட்டங்களைச் சார்ந்த நிர்வாகிகள், அங்கத்தினர்கள், ஊழியர்கள் அனைவருடனும் கலந்து பேசிய பின்னர் காரியக்கமிட்டி கூடி உயர்மட்டக்குழுவான மாகாண கமிட்டியின் கூட்டத்திற்கான தேதியை நிர்ணயிக்கலாம் என்பதே எனது எண்ணம்.

சோதனையான இந்த நேரத்தில் அடித்தள ஊழியர்களையும் கிராமம் முதல் மாவட்டங்கள் வரையில் உள்ள அமைப்புகளின் பொறுப்பாளர்களையும்சார்பு மன்றங்களைச் சார்ந்தவர்களையும் சந்திக்க மறுப்பது நல்லதல்ல என்றே கருதுகிறேன். இலட்சிய வழி நின்றுகட்சியின்நடைமுறை நிர்ணயிக்கின்ற பெரும் பொறுப்பைத் தாங்கி இருப்பவர்கள் மாகாணகமிட்டிஅங்கத்தினர்கள் கட்சியின் தூண்களாக விளங்குபவர்கள் அவர்கள் என்பதை நான் உணர்ந்தே இருக்கிறேன்.

நாங்கள் சுற்றுப்பயணம் வரும் போது அவர்களும் எங்களுடன் இருந்து ஊழியர்களின் கருத்தை அறிய வேண்டுமென்பதே எனது நோக்கம். மாகாண கமிட்டி அங்கத்தினர்களும் அடித்தள ஊழியர்களின் கருத்துக்களைத்தெரிந்துகொள்வதற்கு இந்த சந்திப்பு அவசியம்என்பதே எனது அபிப்பிராயம்.

இந்த ஊழியர் கூட்டங்கள் ஒளிமயமான எதிர்காலத்திற்கு வழி வகுக்கும் என்றும் பெருந்தலைவர் காமராஜ் அவர்களின் நெஞ்சத்தில் நிலை பெற்றிருந்த லட்சிய கனவுகளை நனவாக்க ஊக்கம தரும் என்றும் நான் திடமாக நம்புகிறேன் என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் 'ஒரு அரசியல் கட்சிக்கு எத்தனை தலைவர்கள் இருந்தாலும் கட்டுப்பாடான தொண்டர்கள் இல்லாவிட்டால் எந்த அரசியல் கட்சியும் சோதனைகளை கடந்து நிலைத்து வாழ முடியாது' என்றும சுட்டிக் காட்டியுள்ளார்.

# "கொடாகண்டன் முதலாளியும், விடாகண்டன் தொழிலாளியும்"

நெய்வேலி, நவ. 11—

தமிழ்நாடு வீராணம் குடிநீர்த்திட்டத்தின் குழாய் தயாரிப்பு தொழிற்சாலை சத்ய நாராயணு அண்ட் பிரதர்ஸ் என்ற தனியார் நிர்வாகத்தில் பண்ணுருட்டிக்கு அருகில் உள்ளது. இந்த தொழிலக முதலாளி தன்னிடம் வேலை செய்த தொழிலாளர்களுக்கு கடந்த ஜூன் மாதம் முதல் 5 மாதமாக வேலை செய்ததற்கான ஊதியம் வழங்கவில்லை. இந்த கம்பெனியில் ஏற்பட்ட ஊழல் களைப்பற்றி தமிழக சட்ட சபையில் சந்திசிரித்ததை அனைவரும் அறிந்ததே.

இந்த கம்பெனியில் உள்ள ஊழியர்களும் தொழிலாளர்களும கூடி தொழிற்சங்கத்தை உருவாக்கினர்கள், நெய்வேலி சி ஐ டியூ சங்கத்தின் செயலாளர் தோழர் கே. திருவேங்கடத்தை சிறப்புத் தலைவராகக் கொண்டு வீராணம் திட்ட ஊழியர் சங்கம் செயல்பட்டு வருகிறது. சங்கத்தின் சார்பில் சம்பளம் பட்டுவாடா செய்யவில்லையென கூறி திருச்சி துணை தொழிலாளர் ஆணையாளரிடம் வழக்கு நடத்தியும் பலனேதும் இல்லை.

## நிர்வாகம் கைவிரிப்பு

வேலையைசெய்துவிட்டு உற்பத்தியை பெருக்கிவிட்டு சம்பளம் இல்லாமல் பொறுமையாக பட்டினி கிடந்த ஊழியர்கள் சீறிஎழுந்தனர். சம்பளம் கேட்கலாமென்ருலோ, இக்கம்பெனியின் பிரதம இன்ஜினியர் இங்கு இல்லை. சென்னையில் உள்ளார். எனவேகடன்வாங்கிக் கொண்டு சென்னை நோக்கி புறப்பட்டனர். இதே கம்பெனியின் திருக்கழுக்குன்றத்தின் கிளையில் உள்ள ஊழியர்களும் சென்னை சென்றனர்,

சென்னையில் சங்க நிர்வாகிகள் மாநில தொழிலாளர் நல ஆணையாளரிடம் [27—10—75-ல்) புகார் செய்தனர். மாநில தொழிலாளர் நல ஆணையாளர் கம்பெனி நிர்வாகத்தைப் பற்றி விசாரித்த போது காண்டிராக்ட் முடிந்து விட்டது என்றும், அரசாங்கத்திடமிருந்து பணம்வாங்க வேண்டுமஎன்றும் கம்பெனி நிர்வாகம் கைவிரித்தது.

## போராட்டம் கெரோ

குடிநீர் வாரியமே இந்த நிர்வாகத்தை எடுத்துக் கொண்டு தொழிலாளர்களுக்கு சம்பளம் பட்டுவாடா செய்ய வேண்டும என வீராணத் திட்ட ஊழியர் சங்கம் கோரியது. அதுபற்றி அரசாங்கத்திடம் பேசி முடிவு கூறுவதாக ஆணையாளர் கூறினர். அரசாங்கத்திடம் பேசியதில் நிர்வாகத்தை அரசாங்கம எடுப்பது பற்றி அதாவது தேசிய மயமாககுவதுபற்றி முடிவு செய்யாமல் சம்பள பட்டுவாடா செய்யமுடியாதுஎனகிராமப் புற வளர்ச்சித் துறையினரும் குடிநீர் வாரியமும கை விரித்தனர். ஊழியர்கள் விட்டபாடில்லை.

கொடாகண்டனமுதலாளிக்கும், விடாக்கண்டனன தொழிலாளர்க்கும் இடையே போராட்டம் தொடர்ந்தது. ஊழியர்கள் சத்ய நாராயணு கம்பெனியின் (சென்னை அலுவலகம) முன்பு சுமார் 150 ஊழியர்கள் உட்கார்ந்து 29—10—75ல் கோஷமிட்டனர்.

ஊழியர்களின் போராட்டத்தை ஒடுக்க ஒரு லாரியில் போலீஸ் விரைந்து வந்தது. ஊழியர்கள் தங்களது போராட்டத்தினை தொடர்ந்தனர். 29—10—75 மாலைகம்பெனியின் பிரதம இன்ஜினியரைச் சுற்றி கெரோ செய்து கை செலவிற்கு ஒவ்வொரு தொழிலாளிக்கும் பணம வேண்டும் என கோரினர்கள்.

போலீஸ், ஊழியர்களை கைது செய்யப் போவதாக அறிவித்தது. ஊழியர்கள் கைதாகவும், சிறை செல்லவும் தயாராகி விட்டனர்என தெரிந்ததும் இரவு 8மணிக்கு பிரதம இன்ஜினியர் 150ஊழியர்களுக்கும் தலைக்கு ரூ 10 வீதம கைசெலவிற்கான பணம்தந்தார்.

## முடிவு

30—10—75ல் சங்கத்தின் சிறப்புத்தலைவர் தோழர். கே திருவேங்கடம் அவர்கள் கிராமப்புற வளர்ச்சித் துறை காரியதரிசியை நேரில் சந்தித்து தொழிலாளர்களுக்கு 5 மாத சம்பளம் பட்டுவாடா செய்ய விலலையென்றும் தீபாவளிக்கு முன்பு சம்பளம் பட்டுவாடா செய்யவேண்டும் என்றும் கோரினர். திரு வெங்கட்ராமன் அவர்களும் ஆவன செய்வதாக கூறினர்.

31—10—75 வரை கம்பெனியின் முன்பு அமைதியாகஉட்கார்ந்துஊழியர்கள் கோஷங்களை முழக்கினர். 22—10—75 முதல் போலீஸ் பட்டாளமும் கம்பெனியின் வாசலிலேயே இரவு பகலாக காத்து இருந்தது. கெரோ செய்யும் தொழிலாளிகளும் ஊழியர்களும் கைது செய்யபடவும் சிறைக்கு செல்லவும் தயாராக இருக்கிருர்கள் என அறிந்த லேபர் கமிஷனரும், குடிநீர் வாரிய அதிகாரிகளும் கூடி ஆலோசித்தனர். அக்டோபர் 1975 வரை ஊழியர்களுக்கு கம்பெனி தரவேண்டிய சம்பள பாக்கி விபரத்தைப் பெற்று அதற்கான பணத்தை மட்டும் அரசாங்கம்கம்பெனிக்கு தர வேண்டியதிலிருந்து பெற்றுத்தருவது என முடிவு செய்தனர். ஏற்பாடு செய்தனர்.

## முறியடிப்பு

இந்த கம்பெனி நிர்வாகம் மேலும் பல காண்டிராக்டர்களிடம் கடனாளியாக இருப்பதால் அவர்களும் இந்த பணத்தில் பங்குபோட எடுத்த சட்ட நடவடிக்கைகளையும் முறியடித்து ஊழியர்கள்தங்களுக்கு சேர வேண்டிய சம்பள பாக்கியை 1—11—75-ல் பெற்றனர். கம்பெனி நிர்வாகம் ஊழியர்களுக்கு கொடுத்த ஊதிய ரசீதுகளில் இதுவே முடிவான சம்பள பட்டுவாடா என எழுதியதையும் ஊழியர்கள் முறியடித்தனர். இது சம்பந்தமாகவும் லேபர் கமிஷனரிடம் புகார் செய்யவே அவரும் கடுமையாக ஆட்சேபித்தார். "மறுப்புடன் பெற்றுக் கொண்டோம்" என ஒவ்வொரு ஊழியரும் கையொப்பமிட்டு பணத்தைப் பெற்றனர்.

ஊழியர்களுக்கு இக்கம்பெனியிடம் முடிவான சம்பள பட்டுவாடா உண்டா இல்லையா என்பதைப் பற்றியும், இக்கம்பெனியில் ஊழியர்களுக்கு வேலை இல்லாததால் ஊழியர்களின எதிர்கால வேலை பற்றியும் மீண்டும் ஒரு விசாரணை போடுவதாக தொழிலாளர் ஆணையாளர் உறுதி கூறியுள்ளார்.

# வருந்துகிறோம்

நன்னிலம் தாலுகா விளாகம் தோழர் கே. காளியப்பன், கடந்த 7—11—75-ந் தேதியன்று விளாகத்தில் காலமானுர் என்பதை வருத்தத்துடன் தெரிவிக்கிறோம். இத்தோழர் நீண்டநாள் நோய்வாய்ப்பட்டிருந்தார். தோழர் கே. காளியப்பனின் உடலடக்க நிகழ்ச்சியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தாலுகா தலைவர்களும் தோழர்களும் கலந்து கொண்டனர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் [6/16 பைபாஸ் ரோடு மதுரை 625018] அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் எம் ஆர் வெங்கட்ராமன்.

# உசிலைத் தாலுகாவில் தாழ்த்தப்பட்ட மக்களின் அவல நிலை

உசிலம்பட்டி, நவ. 12—

மதுரை மாவட்டம்உசிலம்பட்டி தாலுகாவில் தாழத்தப்பட்ட மக்களின் அவல நிலை சொல்லி முடியாது என்று அத்தாலுகாவில் அக்டோபர் மாத இறுதியில் பாதயாத்திரை செய்துவந்த தோழர்கள் கருத்து தெரிவித்தனர்.

திம்மநத்தம, அய்யம்பட்டி, பெருமாள் கோவில் பட்டி, சின்னச்செம்மேட்டுப் பட்டி, கருக்கட்டான்பட்டி போன்ற ஊர்களில் அரிசனங்களின நிலைமை படுமோசமாக உள்ளது. அடிமைமுறை இத் தாலுகாவில் தொடர்ந்து ஆட்சி புரிகிறது. நிலப்பிரபுத்துவக் கொடுமைகள் சொல்லி முடியாது. ஓசியாக வேலை வாங்கப்படுகிறது.

தேர்தல் காலத்தில் அரிசன மக்கள்—ஒரு குறிப்பிட்ட ஜாதிக்கட்சியினரால் தமது கட்சிக்குஓட்டுப்போட வேண்டும் என்றும் இல்லாவிட்டால் என்ன நடக்கும் என்று சொல்ல முடியாது என்றும்மிரட்டுகிருர்களாம்.

அரிசனப் பெண்களின் நிலைமை இந்தத் தாலுகாவில் படுமோசமாக உள்ளது. சில ஊர்களில் பெண்கள் தங்களதுகற்பையும்இழக்கவேண்டிய நிலைமைக்கும் ஆட்பட வேண்டியுள்ளதாம்.

தொட்டப்பநாயக்கனூர் கிராமத்திலுள்ள அரிசனங்கள் தீண்டாமையின் உச்ச கட்டத்தில் இன்னும் நடத்தப்படுகின்றனர். அவர்களுக்கு டீ கடையில் தனிக் கோப்பையைப் பயன்படுத்துகிருர்களாம். பெஞ்சியில் உட்காரமுடியாது; கீழே தான் உட்கார வேண்டுமாம் தெருக்களில் தலைப்பாகை கட்டிக்கொண்டோ, செருப்புப் போட்டுக் கொண்டோ, குடைபிடித்துக்கொண்டோ அரிசனங்கள் சென்ருல் அவர்கள் உதைக்கப்படுகிருர்களாம். தீண்டாமைச் சட்டம் நன்ருகத் தூங்குகிறது.

ஒட்டு மொத்தமாக அரிசனங்கள் வாழும திம்மநத்தம், வெள்ளை மலைப்பட்டி கருக்கட்டான் பட்டி புதுக்கோட்டை தொட்டப்ப நாயக்கனூர் ஆகிய கிராமங்களில் உள்ளவர்கள், தங்களுக்குக்கு காலனி கட்டிக்கொடுக்க வேண்டுமென்று கோரியும் அதைப் பற்றி அரசு செவிசாய்க்கவில்லை என்று பாதயாத்திரைக் குழுவினரிடம் அவர்கள் வேதனையோடு சொன்னுர்கள். தொட்டப்ப நாயக்கனூர் அரிசன மக்கள் முதலமைச்சர் கருணாநிதிக்குக் கொடுத்த மனுவின் பிரதியொன்றைக்குழுவினரிடம் அவர்கள் கொடுத்தார்கள்.